# செருப்புக்கு அடி அட்டையா?

வ.ரா.

## லோபி

சாந்தூர் கிராமத்திலே, மச்சு வீட்டுப் பரமசிவம் பிள்ளை வாழ்ந்து வந்தார். 'மச்ச வீட்டுக்காரர்கள்' அந்த ஊரில், பரம்பரைப் பணக்காரர்கள். இவர்கள் சொத்தில் விசேஷம் என்னவென்றால், இவர்களுக்குப் பூமி அதிகமில்லை. எல்லாம் ரொக்கப் பணம்.

சின்னப் பையன்களுடைய பாடப் புஸ்தகங்களில், மயில் தோகை குட்டி போடும் ரொக்கப் பணமும் ''பிள்ளைத் தாய்ச்சி போல'' வட்டிக்குழந்தைகளைப் பெற்றுக் கொண்டேயிருக்கும். ரொக் கலேவாதேவிப் பணம் மலடுமல்ல; அதற்குக் காய்த்து, பழுத்து, அலுத்துப் போகிற காலமும் கிடையாது.

மச்ச வீட்டுப் பரம்பரையின் தற்காலத் தலைவர் பரமசிவம் பிள்ளை. ''ரூபாய்க்கு உயிருண்டு; அதை அழுத்திப் பிடித்தால், அதற்கு வலிக்கும். நோட்டு என்பது வாடாமல்லிகை. அதைக் கசக்கினால், அதன் மணம் போய்விடும்!'' என்ற தத்துவத்தைக் கொண்டவர் பிள்ளை. இவர் இந்தத் தத்துவத்தைக் கண்ட வகை மட்டும் அவருக்குத்தான் தெரியும்.

தத்துவ தரிசனத்துக்குக் காரணம் தேவையா? அடிபட்ட புறா வைக் கண்டு, புத்தன் மனம் மாறிப் போயிற்று. கிழிந்த பட்டின் எழுத்தைப் பார்த்து, பட்டணத்தார் ஸன்யாஸம் கொண்டார். ஏழைப் பிச்சைக்காரர்களின் பரிதாப நிலையைக் கண்டு, மாஜினி, இதாலியா தேசத்தின் விடுதலைக்கு உழைத்தார்.

## இருந்தாலும் காரணம்

இருந்தாலும் பிள்ளையவர்களின் தத்துவ தரிசனத்துக்குக் காரணத்தை ஊகித்தாலும் ஊகிக்கலாம். உயிரில்லாத சவத்தை ஒருவரும் மதிப்பதில்லை. உயிருள்ள வஸ்துக்களைத்தான், உலகில் நாடுகிறார்கள். மனிதர்கள் உயிரைக் கொடுத்துக் கூடப் பணத்தைத் தேடுவதால், பணத்துக்கு உயிர் கண்டிப்பாய் இருக்கத்தான்

செய்கிறது. இவ்வாறு, தர்க்கரீதியாகப், பிள்ளையவர்கள் முடிவுக்கு வந்தாராகில், அதை மற்றவர்கள் அசைக்கத் திருப்ப முடியுமா?

கோடீசுவரனான ராக்பெலர் பிரபு பணத்தை ஏராளமாகச் சம்பாதித்தார்; ஏராளமாகச் செலவும் செய்து வருகிறார். ஆனால் பரமசிவம் பிள்ளையோ, ராக்பெலரின் முன் பகுதிக் கொள்கை யைத்தான் ஆதரிப்பவர். செலவு என்றால், அவருக்குத் தலையை அரிக்கும். காலில் மொய்க்காத ஈக்களைத் தட்டுவார். கெட்டுப் போகாத சாமானைக், கண்டவிடமெல்லாம் பரபரப்புடன் தேடு வார். நான்கு நாட்களுக்கு முன், செவ்வையாக முடிந்துபோன காரியத்தைப் பற்றிக் குறை கூறி முணுமுணுப்பார்.

**பணம் கேட்க**

இவ்வளவையும் கண்டு சகிக்காமல், விடாப்பிடியாக, அவருடைய மனைவி, வீட்டுக்குச் செலவுக்குப் பணம் கேட்டால், இடுப்பிலிருக்கிற சாவியை, காரியஸ்தன் ஆதியப்பன் கொண்டு போய்விட்டதாக, அவனைக் கண்டபடி திட்டி, அவன் வருகையை எதிர்பார்ப்பது போல, ''ஆதியப்பா'' என்று கூவிக் கொண்டே, வீட்டுக்கு வெளியே, தாவித்தாவி ஓடிவந்துவிடுவார். அவருக்கு ஒரு கால் ஊனம். அதனாலேதான், தாவ வேண்டியிருக்கிறது.

பணம் இல்லாமல் எப்படிக் குடும்பம் நடக்கும்? இது பரமசிவம் பிள்ளைக்குத் தெரியும். ஆனால் அவர் பெண்சாதி சம்பந்தமாக, அபூர்வமான நீதி வாக்யம் ஒன்றை அமைத்து, அதை அரங்கேற்றியும் இருக்கிறார். ''பத்தினிக்கு அழகு பணம் வேண்டா திருத்தல்!'' என்று அவர் அழகாக, வாய் நிறைய, உள்ளம் பூரிக்க உச்சரிப்பார்.

வீட்டுக்கு வெளியே வந்த பிள்ளையவர்கள், ஆதியப்பன் தற்செயலாய், அந்த சமயம் வருவதைக் கண்டு விட்டால் பதை பதைத்துப் போவார். லோபி பரமசிவத்தைத் துரத்திக் கொண்டு வந்த அவரது தர்ம பத்தினி, வீட்டு வாயில் நிலைப்படியில் நின்று கொண்டிருப்பாள்.

''ஏண்டா, ஆதியப்பா, என் கொத்துச் சாவி எங்கே? அதைக் காணோமே!'' என்று கனைத்துக் கொண்டே கேட்பார் பிள்ளை. கொத்துச் சாவி, பிள்ளையின் மடியிலிருந்து, வேறு எவர் கைக்கும் ஏறாது என்பது சாந்தூர் கிராமத்திலே பிரசித்தமான சங்கதி. தலையைக் குனிந்து கொண்டு, ஆதியப்பன் சிரிப்பான். பிள்ளை யவர்களின் மனைவி லோகாம்பாள் ஆதியப்பனுடைய சிரிப்பை அனுபவிப்பாள்.

**''கண்டேன் சீதையை''**

இந்த சமயத்தில், எங்கேயோ விளையாடப் போயிருந்த பிள்ளையவர்களின் திருவளர்ச் செல்வி தங்கம்மாள் ஓட்ட ஓட்டமாய் ஓடி வந்து, ''ஏன் எல்லோரும் தெருவுக்கு வந்து விட்டீர்கள்? பூகம்பமோ?'' என்று சொல்லிச் சிரிப்பாள்.

''பூகம்பத்துக்கு மேலேதான். உங்கப்பாவின் கொத்துச் சாவியைக் காணோம்!'' என்பாள் லோகாம்பாள்.

''அது இருக்கிற இடம் எனக்குத் தெரியும்!'' என்று சரேலென பிள்ளையவர்களின் வலதுபக்க இடுப்பில் கைவைத்து, ''கண்டேன் சீதையை!'' என்று பாடிக் கொண்டு கொத்துச் சாவியை வெளியே எடுப்பாள்.

''எனக்கு வயதாய் விட்டதல்லவா? உடம்பு மரத்துப் போய் விட்டது. உடம்பிலே இருக்கிறதைப் பற்றி ஞாபகமுமில்லை, உணர்ச்சியும் கிடையாது!'' என்று முணுமுணுப்பார் பிள்ளை. பிறகு பணமில்லாத பெட்டியைத் திறந்து, ''பைசாக்கூட இல்லையே. எல்லாம் நோட்டு. பிராமிசரி நோட்டு!'' என்று பெருமூச்சு விட்டுக் கொண்டு, கையை விரிப்பார்.

ஆதியப்பன் கையிலிருக்கும் அவன் சொந்தச் சில்லறைப் பணத்தைக் கொண்டு, பரமசிவம் பிள்ளையினுடைய குடும்பச் செலவு அன்றைய தினம் எப்படியோ, நடந்து போய்விடும். ஆனால் பரமசிவம் பிள்ளையிடம் ஓர் அபூர்வ சாமர்த்தியம் உண்டு. மனைவி கேட்ட காரியம் நிறைவேறிப் போனால், அதற்கு எங்கிருந்து பணம் வந்தது என்று பிள்ளையவர்கள் கேட்கவே மாட்டார்; கேட்டதும் இல்லை.

பிள்ளையவர்களுக்கு வயது ஐம்பது. அவருடைய மனைவிக்கு நாற்பத்தெட்டு வயது. குழந்தை தங்கத்துக்குப் பத்து நிறைந்து, பதினோராம் வயது நடக்கிறது. ஆதியப்பன் பதினெட்டை விட்டு விட்டு, பத்தொன்பதைத் தொட்டுக் கொண்டிருக்கிறான். ஆதியப்பன், பிள்ளையின் மனைவிக்குத் தூரத்து உறவு.

**சுயம்பு**

பரமசிவம் பிள்ளைக்கு ஒரே ஒரு தங்கை. அவளுக்குச் சுயம்பு என்று ஒரு மகன். அவனுக்கும் கிட்டத்தட்ட ஆதியப்பன் வயது தான். அவன் இங்கிலீஷ் புலவன். சென்னையில் படிக்கிறான். தாய் மாமன் பிள்ளையவர்களின் வீட்டுக்கு அடிக்கடி வருவான். ஒரு தமிழ் வார்த்தையோடு, நாகரிக மதிப்புப் பெற்ற ஐந்து இங்கிலீஷ்

வார்த்தைகளைச் சேர்த்துப் பேசினால்தான், அவனுக்குப் பேசின மாதிரி இருக்கும். இல்லாவிட்டால், அவனுக்கு ராத் தூக்கம் பகல் தூக்கம் இரண்டும் அடியோடு கெட்டுப் போகும். தான் பேசுவது மற்றவர்களுக்குத் தெரியவேண்டுமே என்ற கவலையே அவனுக்குக் கிடையாது.

மாமன் வீட்டுக்கு வந்த சுயம்புவுக்கு விருந்து செய்ய வேண்டும் என்று லோகாம்பாள் சொல்லுவாள். ''பட்டணம் பித்த பூமி. அவன் ஓட்டலில் பருப்பு, வெங்காயச் சாம்பார், வருவல், பொறியல் எல்லாம் சாப்பிட்டு, அலுத்துப் போயிருப்பான். புளிக் குழம்பு, ரஸம், ஒரு கறி செய்து போட்டால், அவனுக்கு ரொம்ப சந்தோஷம் உண்டாகும்!'' என்று விருந்துப் பேச்சை மழுப்பி, மனைவியின் வாயை அடக்கிவிடுவார்.

செலவு சங்கதிக்கு அவர் காது செவிடு. அவருடைய நாக்கு வைத்தியம் பேசும்; தர்ம சாஸ்திரம் பேசும் தத்துவ உபதேசம் செய்யும். சிக்கனத்தைப் பற்றி செந்தமிழ்ப் பிரசங்கம் செய்யும்.

## அவமதிப்பு

காரியஸ்த ஆதியப்பனிடம், ஸர்வ கலாசாலைப் பட்டம் பெறப்போகும் சுயம்புவுக்கு அளவிலா அவமதிப்பு. ஆதியப்பன் ஒன்றுந் தெரியாத மடையன் என்பது சுயம்புவின் கருத்து. ''என்ன கணக்குப் பிள்ளை! ஒழுங்காகக் கணக்கு எழுதி வருகிறீரா? மாமாவை ஏமாற்றி வருகிறீரா?'' என்று சுயம்பு துடுக்காகக் கேட்பான்.

''ஏதோ, தெரிந்த வரையிலும் செய்து வருகிறேன்!'' என்பான் ஆதியப்பன்.

''தெரிந்தவரையிலும் ஏமாற்றி வருகிறீரோ?'' என்று சுயம்பு சிரிப்பான். இதைக் கேட்டுக் கொண்டிருக்கும் தங்கம்மாள், ''அத்தான்! உங்களுக்கு இந்த வாய்த் துடுக்கு வேண்டாம். ஆதியப்பன் இல்லாமற் போனால், அப்பாவின் சாயம் வெளுத்துப் போயிருக்கும்!'' என்று சொல்லிவிட்டு, தாயாரிடம் ஓட்டம் எடுப்பாள்.

குனிந்து கொண்டு, கணக்கு எழுதிக் கொண்டிருக்கும் ஆதியப்பன், தங்கம்மாளின் ஓடுகிற கால்களைப் பார்த்துக் கொண்டே, பெருமூச்சு விடுவான். இதற்குப் பிரதி செய்வது போல, சுயம்புவும் பெருமூச்சு விட்டுக் கொண்டு, மெதுவாக வேறு பக்கம் நகர்வான். இதற்குள் தந்தியைப்போல, தங்கம்மாள் தன்

தாயாரிடம் சேதியைச் சொல்லித் தீர்த்து விடுவாள். ''போ, அசடே! போ!'' என்று லோகாம்பாள் சொல்லிவிட்டு, அவள் போன பிறகு மனம் புழுங்குவாள்.

## இருக்காது

தங்கம்மாளின் குழந்தைப் பருவம், இருந்த இடத்திலேயே இருக்குமா? பரமசிவம் பிள்ளையின் கிழப் பருவமும் பழுத்துக் கொண்டே போயிற்று. ஆதியப்பனுக்கும் சுயம்புவுக்கும் இன்னும் கலியாணமாகவில்லை. லோகாம்பாளுக்கு ரொம்பக் கவலை. பரமசிவம் பிள்ளைக்குச் சுயம்புவின் பட்டத்திலே மோகம். லோகாம்பாளுக்கு வேறு ஆசை இருந்தும் என்ன செய்ய முடியும்? தங்கம்மாள் இதைப் பற்றிக் கவலையே படவில்லை. ஆதியப்பன், குனிந்த தலை நிமிராமல் கணக்கு எழுதிக் கொண்டிருக்கிறான்.

ஒரு நாள், பரமசிவம் தன் பெண்ணின் கலியாணத்தைப் பற்றிப் பேச்சைத் துவக்கினார். ''உன் பெண்ணைக் கலியாணம் செய்து கொடுப்பதற்கு, உனக்கு இன்னும் மனம் வரவில்லையா?'' என்று லோகாம்பாளைக் கேட்டார். லோகாம்பாளுக்கு, இந்த விபரீதக் கேள்விக்கு அர்த்தம் விளங்கவில்லை. ''இந்த சங்கதியிலே எனக்கு என்ன மனம் வேண்டி யிருக்கிறது! அப்பா பொறுப்பு, பெண் பொறுப்பு!'' என்று வார்த்தைகளைக் கடித்துக் கொண்டே பேசினாள்.

''இல்லை, கல்யாணத்துக்குப் பணம் வேண்டுமே! என்ன செய்கிறது என்று யோசிக்கிறேன்,'' என்றார் பரமசிவம்.

''என்ன வேடிக்கைப் பேச்சுப் பேசுகிறீர்கள்! உங்கள் பணத்துக்குப் பதினாயிரம் கல்யாணம் செய்யலாமே!'' என்றாள் லோகாம்பாள்.

''நல்ல யுக்தி! அது எனக்குத் தெரியாதோ? என் பணமெல்லாம் தங்கம்மாளுக்குப் போகாமல் வேறு யாருக்குப் போகப் போகிறது? உனக்குத் துண்டாக உங்களப்பா ஒதுக்கி வைத்திருக்கிறாரே, அதை உன் அண்ணன் தம்பிமார்களிடமிருந்து வாங்குவதற்கு இதுதான் நல்ல சமயம். பிறகு ஏமாற்றி விடுவார்கள், சாக்குப் போக்குச் சொல்லி. அந்தப் பணத்தை நீ அவர்களைக் கேட்டு இப்போது வாங்கிவிடுவதுதான் உசிதம்!'' என்றார்.

''இருக்கட்டும்! மாப்பிள்ளை திகைந்து போனது போலப் பேசுகிறீர்களே!'' என்றாள் லோகாம்பாள்.

''வெண்ணெயை வைத்துக் கொண்டு, நெய்க்கு அலைவார் யாராவது உண்டா? சுயம்புதான் மாப்பிள்ளை என்ன சந்தேகம்?'' என்றார் முதலாளி. இன்னும் சமையலாக வில்லை என்று போய் விட்டாள் லோகாம்பாள்.

**பட்டமா பெரிது?**

''ஏன் அம்மா! பணமும் பட்டமும் பெரிது என்கிறாரே, அப்பா? பணத்தினாலே அப்பா அடைந்த பெருமை என்ன, சுகமென்ன? சுயம்புவைக் கண்டால் எனக்கு வரவரப் பிடிக்க வில்லை. அவன், அம்மா வயிற்றில் பிறக்காமல், ஆகாயத்திலிருந்து குதித்தவன் மாதிரிப் பேசுகிறான். அவன் கிட்ட ஈவிரக்கம் இருக்காது போலிருக்கிறது. என்ன டாம், டோம் இங்கிலீஷ்? யாருக்கு வேண்டியிருக்கிறது?'' என்று சுருக்கமாக ஒரு பிரசங்கம் செய்துவிட்டாள் தங்கம்.

''எனக்கு உலகத்திலே ஒன்றுமே தெரியாது. இனிமேல் கற்றுக் கொள்ள ஆசையுமில்லை. வந்ததை அனுபவிக்கத்தான் என்னால் முடியும். உனக்கு வேண்டியதை அப்பா கிட்டச் சொல்லு,'' என்றாள் தாயார்.

''இப்படிச் சொல்லத்தான் உனக்குத் தெரியும் போலிருக் கிறது!'' என்று முனகிக் கொண்டு போய் விட்டாள் தங்கம்.

என்ன முனகிக் கொண்டிருக்கிறாய் என்று பரமசிவம் பிள்ளை, திருட்டுப் பிடித்து விட்டதுபோல, தன் பெண்ணைக் கேட்டார். ''அம்மாவிடம் அத்தான் சுயம்புவின் படாடோபத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தேன். அவ்வளவுதான்!'' என்று தங்கம்மாள் குத்தலாகச் சொன்னாள்.

**தங்கத்துக்கேற்ற தங்கம்**

''சுயம்பு தங்கத்துக்கேற்ற தங்கமான பிள்ளை. நூறு ரூபாய் ஸர்க்கார் உத்தியோகம் அவனுக்கு. இந்த நாளிலே ஒரு பைசா, குதிரைக் கொம்பு. சுயம்புக்குத்தான் உன்னைக் கலியாணம் செய்து கொடுப்பதாக உத்தேசம்!'' என்றார் பரமசிவம்.

''நான் சொல்லுகிறேன் என்று கோபித்துக் கொள்ளாதீர்கள். இனம் இனத்தோடுதானே சேரும். அம்மாவின் அருமை அறியாத நீங்கள், பெண்களின் அருமையையும் குடித்தனத்தின் பெருமை யையும் அறியாத சுயம்புவை மதிப்பதில் ஆச்சரியமில்லை. உங்களுக்குப் பணம் பெரிது. சுயம்புவுக்குத் ''தான் பெரியவன்''

என்று எண்ணம். பட்டம் காற்றில் பறக்கும். பணம், செத்தால் கூட வராது!'' - என்று துடிதுடிப்புடன் பேச்சை முடித்து விட்டாள் தங்கம்.

''ஏன் இப்படித் துடுக்காகப் பேசுகிறாய்?'' என்று சமாதானம் செய்வது போல, லோகாம்பாள் சமையலறையிலிருந்து வெளியே வந்தாள். ''உங்க அம்மா சொல்லுகிறது தெரிந்ததா?'' என்றார் பரமசிவம்.

## அடி அட்டையா?

''நன்றாகத் தெரிந்தது. உங்கள் பணம் யாருக்கு வேண்டும்? யாருக்கு வேண்டுமானாலும் எழுதி வையுங்கள். இப்பொழுதே சுயம்புக்கு அள்ளிக் கொடுத்து விடுங்கள். எனக்கு ஒரு பைசா வேண்டாம். செலவு இல்லாமல் குடித்தனம் செய்வதற்கு, நீங்கள் தான் என்னையும் அம்மாவையும் நன்றாகப் பழக்கி வைத்திருக் கிறீர்களே! உங்களுக்கு எங்களைப் பற்றி என்ன கவலை? குனிந்த தலையைத் தூக்காமல், நாள் முழுதும் உங்களுக்கு உழைத்து, உங்கள் பணத்தை ஒன்றுக்குப் பத்தாய்ப் பெருகச் செய்து, தனக்கு என்று வாய் விட்டு ஒன்றையும் கேட்காமல், எப்பொழுதும் சந்தோஷத்துடன் இருக்கும் ஆதியப்பனைப் பற்றி உங்களுக்கு என்ன கவலை? உங்கள் பணம் சுயம்புவுக்கு ''பூட்ஸு''க்கு (கால் செருப்புக்கு)ப் போனால், உங்களுக்குப் பரம திருப்தி. அந்தச் செருப்புக்கு அடி யட்டையாக நான் போக வேண்டும். அந்தச் செருப்பை ரிப்பேர் பார்க்க, அம்மா பணம் போக வேண்டும். உங்கள் யோசனை நல்ல யோசனைதான். அது பெரியவர்களின் யோசனையல்லவா?'' என்று பேச்சை முடித்துவிட்டாள்.

பரமசிவம் பிள்ளை தலையைத் தடவிக் கொண்டு, இதையெல்லாம் மௌனமாய்க் கேட்டுக் கொண்டிருந்தார்.